வீராசாமி நல்ல மனிதர், ஆகையால் அவர் எதுவும் பேசவில்லை. அவரது கையாட்கள், காலாட்கள் வந்தார்கள். வினை தீர்த்தானின் வயலை மிதித்துக் கொண்டே வந்தார்கள். "மூட்டம் போட்டால் பெருச்சாளி தானாவரும்" என்பது போல், திக்குமுட்டிய வினைதீர்த்தான், திட்டியே தீருவான் என்பதை எதிர்பார்த்தவர்கள்போல், கர்மயோகிகள் போல் வந்தார்கள். இருவர், வினைதீர்த்தானின் கைகளையும், கால்களையும் பிடித்துக் கொள்ள, எஞ்சிய மூன்று வீரர்கள், அவனை எட்டி உதைத்தார்கள் மண் வெட்டிக் கணையால் வாயில் குத்தினார்கள். வயிற்றில் இடித்தார்கள். அடித்தகளைப்போடு, முதுகை நிமிர்த்திக் கொண்டு, அவர்கள் இளைப்பாறப் போனபோது, வினைதீர்த்தான் வயலில் சுருண்டு கிடந்தான் வாயில் பொங்கிய ரத்தம், வயலை நனைத்தது. வயிற்றில் துளிர்த்த ரத்தத் துளிகள், நெற்பயிரில் பட்டன.

வினைதீர்த்தான் ஓடினான். வயலில் இருந்து வீட்டுக்கு வராமலே ஓடினான். அருகேயுள்ள சட்டாம்பட்டிக்கு ஓடினான். அங்கே வல்லமை பொருந்திய 'சண்டியர்' மிராசுதாரும் வீராசாமியை எப்படிக் கையைக் காலை ஒடிக்கலாம் என்று குறிபார்த்து இருப்பவருமான ராஜதுரையிடம், மூச்சிரைக்க போய் நின்றான்.

"கும்பிடுறேன் அய்யா..."

"என்ன விஷயம் வினைதீர்த்தான்..."

"என் மூணு மரக்கால் விதப்பாட்ட நீங்க எடுத்துக்கணும்.'

"பணம் இல்லியே."

"எவ்வளவு வேணுமுன்னாலும் தாங்க...."

"எந்தப் பக்கமா இருக்கு"

"ஒங்க... மருமகன சந்தையிலே... ஆள் வச்சி அடிச்சாரு பாருங்க... வீராசாமி... அவரு வயலுக்குப் பக்கத்துல.. பொது வரப்பு... பொதுப் பாசனம்..."

"அப்படின்னா... வாங்கிக்கிறேன். இந்த மூணு மரக்கால் விதப்பாட்ட வச்சி... அவன் மூணு கோட்டயயும்... பொட்டல் காடாக்கப் போறேன்... பாரு... மரக்கால் ஆயிரம் ரூபாய்தான் சரியா..."

“தப்போ... சரியோ... நிலத்த... ஒங்ககிட்ட கொடுத்தே ஆகணும்...”

சட்டாம்பட்டிக்கும் குட்டாம்பட்டிக்கும் முட்டாப் பகை - வீராசாமியும் ராஜதுரையும் தங்கள் ‘எக்காளத்தை’ திருப்திப் படுத்துவதற்காக, ஊர்ச்சண்டையை நடத்தியவர்கள். ஒரு கொலைகூட விழுந்திருக்கிறது. வீராசாமியைவிட எல்லா வகையிலும் வல்லவரான ராஜதுரை, வினைதீர்த்தான் நிலத்தை மலைப்பாம்பின் நோக்கோடு வாங்கிக்கொண்டான்.

இப்போது ஊர்க்காரர்களில் சிலர், வினைதீர்த்தானைச் சாடினார்கள்.

“நிலத்தை ஊரவிட்டு... ஊர்ல போயாடா... விக்கது? சட்டாம்பட்டிக்காரன் கொலகாரப் பாவி... நம்ம வீராசாமிய... கஷ்டப்படுத்துனால்... நாம் பாத்துக்கிட்டு இருக்க முடியுமா? ஒன்னால... ரெண்டு ஊருக்கு இடையிலயும் குத்துப்பழி... வெட்டுப்பழி வரப்போவுது.”

வினைதீர்த்தான் சிரித்தான். அழுதான்.

வயலில், தன் சொந்த வயலில், கண்மணிபோல் காத்து நெல்மணியில் பட்ட தன் ரத்தம் - சொந்தப் பிள்ளையைப் போல் பாவித்த தன் நெற்பயிர்களில் நீருக்குப் பதிலாகப் பட்ட ரத்தத்துளிகள், வீராசாமியையும், அவன் ஆட்களையும், இந்த விவகாரத்தில் நியாயத்தின் பக்கம் நில்லாத எல்லோரையும் சும்மாவிடாது என்ற அசுரத்தனமான திருப்தியில், ஆன்மீகக் கோபத்தில் சிரித்தான்.

அதேசமயம், விதைக்கும்போது தந்தையாகவும் நாற்றிடும்போது தாயாகவும், உரமிடும்போது ஆசானாகவும் களையெடுக்கும்போது காவலனாகவும், நீரிடும்போது தோழனாகவும் இருந்து, கண்ணுக்குக் கண்ணாய்ப் பராமரித்த வயலை - தன் சொந்த வயலை நினைத்தும் அழுதான். சத்தியம் சத்தம் போடாது என்பதுபோல், அவன் சத்தம் போடாமலே அழுதான்.



# மணிவாசகர் பதிப்பகத்தின் பாடநூல் வரிசை

**முனைவர் தமிழண்ணல்**

தொல்காப்பியம் – சொல்லதிகாரம்
தொல்காப்பியம் – எழுத்ததிகாரம்
தொல்காப்பியம் – பொருளதிகாரம்
(3 தொகுதிகள்)

**முனைவர் ச. அகத்தியலிங்கம்**

திராவிட மொழிகள் I, II

**முனைவர் ச.வே. சுப்பிரமணியன்**

தொல்காப்பியம் (பையடக்கப்பதிப்பு)
தமிழ் இலக்கிய வரலாறு

**முனைவர் சு. சக்திவேல்**

தமிழ்மொழி வரலாறு
நாட்டுப்புறஇயல் ஆய்வு
இதழியல்

**வே.தி.செல்லம்**

தமிழக வரலாறும் பண்பாடும்
தமிழக வரலாறு – புதிய பார்வை

**பேராசிரியர் சோம. இளவரசு**

தமிழ் இலக்கிய வரலாறு
நன்னூல் எழுத்ததிகாரம்
நன்னூல் சொல்லதிகாரம்
இலக்கண வரலாறு